J. S. Rajagopala Aiyer B.A L.T.,

ஓம்

பராசக்தி துணை

# இராமகிருஷ்ணவிஜயம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்ஸ தேவரின் திருவரலாறும்
திருவாக்குகளும்

ஆக்கியோன்

சுத்தானந்தபாரதி



குருகுல அச்சுக்கூடம்
சேரமாதேவி



1925

விலை அணா ௪.

ஓம் பராசக்தி துணை

# முன்னுரை

என் மனதைத் திறந்து அதில் ஒளியையும், நிறைவையும் சுதந்திரத் தையும் பாய்ச்சி, என் களிப்பிற்குக் கருவியாக நின்றது, கல்லாக் கல் வியைத் தெளிந்த பரமஹம்சரின் திரு வாக்குகளும், வரலாறுமே. என் வாழ்வை அருட்பணி யென்னும் வாய்க்கால் வழியாக விடுத்துக் கடவுளின் கருணைக் கடலில் கலக்கத் தூண்டியதும், பரமஹம்ஸரே. எனது அன்பின் ஆர்வத்தைப் பாமாலையாகத் தொடுத்து அவருக்கு அர்ப்பணிப்பதையே எனது உயர் கடனாகக் கொண்டேன். பரா சக்தியின் இன்னருளால் என் கருத்து மணம் பெற்ற பாமாலைகளாகி "இராமகிருஷ்ணாமிருத" மெனப் பெயர் பூண்டு எனது "தோன் றாத் துணையின்" பத மலரில் அர்ப்பணிக்கப்பட் டிருக்கிறது.

இதைப் பாடி சுமார் ௫ ஆண்டுகள் ஆகியும், இதன் மணம் தமிழ ருக்கு நன்கு உகக்குமோவென ஐயமெய்தி யிருந்தேன். முடிவில் சிவகங்கை இராமகிருஷ்ண மடத்தில், அன்பர்கள் முன் இதைப் பதினைந்து நாள் படித்து விரிவுரை நிகழ்த்தினேன். பின்பு தேவ கோட்டை விவேகானந்த சங்கத்தின் சார்பாகவும் பாடி யுரைத் தேன். இராமகிருஷ்ணாமிருதம் நறு மண முடைத்து என்று அன் பர்கள் சொல்லி அதை அச்சிடவும் சிறிது பொருள் சேர்த்துக் கொடுத்தனர். இப்போதுதான் புத்தகம் வெளிவர முடிந்தது. பரமஹம்ஸரின் திரு வாக்குகளை அகவலாக மொழி பெயர்த்தால் அதன் தெளிவு போய்விடுமோ என்று அஞ்சித் தயங்கினேன். இருப்பினும், அப் பெரியாரின் திரு வாக்குகளைத் தமிழர், "திரு வாய்மொழி" போன்றும் பாட வேண்டு மென உள்ளத்திற் கொண்டே, பல நேயர்களின் வேண்டுகோட்படி அவற்றை அகவ லாக்கினேன். எல்லாருக்கும் புரியும்படி வசனத்தில் எழுதியிருப் பதை, சிலருக்கே புரியும்படியான பாட்டில் எழுதியது பிழையென இன்னும் எண்ணுகிறேன். ஆயினும் தமிழர் விரைவில் வசனத்தைப் போலப் பாக்களையும் பொருளறிந்து, பாவாற் பேசி, பாவால் எழுதி பாவாய் என்னும் காலம் வருமென்று எதிர் பார்த்தே பரமஹம் ஸரைப் போன்ற தீர்க்க தரிசிகளின் திரு வரலாறுகளையும் திரு மொழிகளையும் பாக்களாகப் பாடினேன். "பரமஹம்ஸோபதேசம்" படிக்குங்கால் நேயர்கள் "இராமகிருஷ்ணபரமஹம்ஸரின் உபதேச ரத்னமாலையை" அருகில் வைத்துக் கொள்ள வேண்டுகிறேன்.

தமிழர் எனது முயற்சிகளைப் போற்றித் தமிழில் பல முதனூல் கள் பழுக்கும்படி செய்ய வேண்டுகின்ற,

அன்பன்
சுத்தானந்த பாரதி

பரத்துவாஜ ஆசிரமம்
சோமாதேவி
ஆனி ௩௦ கலி ௫௦௨௭

ஓம்

# அட்டவணை.

# "பாலபாரதி"

## சேரமாதேவி.

——[:]——

குருகுலத்தினின்று வெளிவரும்

——(:)——

ஓர் அரிய மாதப்பத்திரிகை.

——:[*]:——

கலி ௫0௨௬ ஐப்பிசிமீ முதல் வெளியாகிறது.

வருஷச் சந்தா:- { உள்நாட்டுக்கு ரூ. ௫.
{ வெளிநாடுகளுக்கு ரூ. ௩-௮



स्वामी श्री रामकृष्ण परमहंस.

Swami Shri Ramkrishna Paramhansa.

J. A. P. W.



ஓம்

பராசக்தி துணை

# இராமகிருஷ்ண மிருதம்

---

## கடவுள் வணக்கம்

### கட்டளைக் கலித்துறை

விண்ணே! வளியே! ஒளியே! புனலே! விரிந்த ஞானக்
கண்ணே! கருத்தே! எழுத்தே! மறையே! களிப்பி லோங்கும்
பண்ணே! கலையே! உருவே! அருவே! பரிவே! யென்றன்
எண்ணே! இறையே! அருளையா னென்சொலி யேத்துவேனே!

### அறுசீர் விருத்தம்

திங்களைக் கண்டா லுன்றன் றிகழ்முகங் கண்டே னென்னும்
செங்கதிர் காணி லுன்ற னருள்வளஞ் சேர்ந்தே னென்னும்,
மங்குலைக் காணி லுன்றன் மாயையைக் கண்டே னென்னும்,
எங்கிலு மிருந்து காட்டி யிதயத்து விலங்கு சோதி!

மாமறை காணி லென்றன் மனப்பர வசமே யாகும்;
மறைந் துறைவ தெல்லாம் நின்மல மனமே காணும்;
வாமரோண் டிருவே! யென்றன் வாக்குடல் நெஞ்சை யுன்றன்
பூமருந் தொண்டி விட்டேன், புண்ணிய மிதனி லுண்டோ!

### வேறு

சிரித்தெழுந்து கதிர்விளங்கு தினகரனுக்
கொளியீந்த திருவி னோடும்,
விரித்தெழுந்த விசும்பினிலே மீன்களையே
பதிப்பித்து விளங்கும் பொற்பைத்
தரித்தெழுந்த தண்மதிக்குச் சாந்தமதை
யீந்ததொரு தாயினன்பைத்
அரித்தெழுந்த தூயவர்க்குத் தொல்லுலகி
லெளிதொன்றுஞ் சொல்லொ ணாதே!

## காப்பு

### வெண்பா

பக்தி சமரசமும் பற்றற்ற வாழ்வு நிலை
சக்தியே யுன்னருளாற் றுனிந்தான்—அத்தனெனப்
பாரெல்லாம் போற்றும் பரமஹம் ஸன்கதையைச்
சீராகப் பாடவருள் செய்.

## க. பாரதநாட்டின் பெருமை

### கலிநிலைத் துறை

வீர ரன்னையை விளக்கொளி யெனப்புவி யேத்தும்
பாரி னன்னையைப் பசுந்திரு மேனியை யன்பு
சேரு மன்னையைப் பாரத தேவியைப் பூவிற்
சீரி னன்னையைச் சிந்தையிற் களிப்பதெம் வீடே!

### அறுசீர் விருத்தம்

அறமெலா முதித்த நாடே யாரணி யுலகைக் காக்கத்
திறமெலாந் திரண்ட வீரர் திருப்பணி புரியும் நாடு;
வெறுக்கையும் புகழு ஞான வீரமும் பொலியு நாடு
சிறப்பினுக் கணிசெய் நாடு சிந்தனைக் கமுத மாமே!

இறைவனே யுயிர்களாக வின்பமே வளம தாக
அறமதே யரசனாக வலைகடல் முரச மாகச்
சிறுமியர் திருவேயாகச் சிவனரும் புலவ ராக,
மறைகளே நூல்களாக மங்களம் பொங்கு நாடே!

வரையெலாம் முனிவ ரீட்டம் வனமெலாங் குருகு லங்கள்;
திரையெலாங் கலன்கள்; ஐந்து திணையெலாஞ் செல்வந் தேவர்
உறைவெலாம் மறைகள்; மாந்த ருளமெலாங் கருணை பொங்கிக்
கரை யிலாக் காட்சி யோடுங் கவின்பெறும் அமர நாடே!

விட்டலே வீடாம்; ஆத்ம வித்தையே வித்தை, தூய்மை
நட்டலே நட்பாங் கற்றை நல்லணி; யுடலைத் தொண்டிற்
கிட்டலே பெருமை; ஆசை விட்டோரெனப் பரம ஞானங்
கிட்டலே கடமை யென்னுங் கீர்த்தியொளி முனிவர் நாடே!

## ௨. காலசக்கரம் மாறுதல்

அற்பமிப் புவிச்சி றென்றே யறிவித்துச் சுழலக் காலம்
கற்பகப் பரத நாட்டைக் கண்டவர் புறக்க லாகித்
தற்சிறப் பிழந்தே யான்ற தருமமுங் குலைந்தே யந்தக்
கற்பொடு பொற்பு மேகிக் கவர்ந்தது புவியை யூழி!

அறந்தனை விடுத்தார்; மாயை யடிமையைத் தொழுதார்; ஆத்மத்
திறந்தனை யெண்ணார்; தீனி முயக்கமே சிந்தை யாவார்;
சிறந்திடுங் கடவுட் கல்வி யொழுக்கங்கள் சிதையப் பண்டை
மறந்தனர் இகழ்ந்தார் நீர்மை மாறினர் பரத நாட்டார்.

சாதியி னெறியை விட்டார்; சமயங்க ளுரைப்ப தோரார்;
சோதியை நம்பார்; பந்தஞ் சுகமெனத் துயருட் பட்டார்;
வேதியர் வேதம் விட்டார்; வேந்தரும் மனுவை நீத்தார்;
வாதமும் வெகுளி யோடு வானுல காண்ட மாதோ!

கல்வியு மயலா ரீயக் கருத்தயற் கருத்தே யாகச்
செல்வமு மயலார் கொள்ளச் சேவக ரவர்க்கே யாகித்
தொல்பெருந் தொழில்களற்றுத் துணியுண வயற்றை யீயப்
பல்பிணி யாள ராகிப் பண்டெழில் குறைந்திட் டாரே.

புதைத்தன ருடைக் குழாத்துட் போற்றினர் புதிய பாடை;
உதைத்தனர் முதியர் சொல்லை யுளத்தினில் வளர்த்தார் தீமை
சிதைந்த விந் நாட்டின் சீரைச் சிந்தனை செய்து நல்லோர்
இதந்தரு தேவி முன்னர், இம்முறை செப்பு வாரே.

## ௩. நல்லோர் முறையிடல்

கலிநிலைத் துறை.

அன்னையே யெமக் கார்துணை நீயலால்: அடியேம்
இன்னல் தீர்த்தினி தாண்டருள் புரிந்திட விசைவாய்
பன்னருந் துய ருற்றது, பண்டுசீர் போய
நின்னருள் சிறந் தய்வதே யொருவழி யறிந்தோம்.

ஊன் மதுக் கொலை காமம தாகிய ஆறும்
ஈன வெஞ்செயல் இலகுமெய் யறத்தினை விழுங்க,
மானம் போயதிங் கடிமையால் மதியுட னெல்லாம்,
ஏனமாத் தொழி லொழித்ததெம் இசையினை யென்றார்.

அன்ன பண்டினில் மகிதல வறத்தினுக் கேதும்
இன்னல் வந்திடின் இனிதுசெய் திட வுட லோடும்
அன்னை யுன்னரு ளோடரி யம்புவி காத்த
தன்ன வின்றெமை யாண்டிட வருள்புரி வாயே!

கோதிலாதவர் குறைகளைக் கேட்டதும் பூவின்
ஆதி நாயகி யுரைத்தனள் "அன்பர்காள் அஞ்சேல்:
நீதயர்ந் திடில் என்வர வனுகிடுஞ் செகத்திற்
சோதி யமர்தினை யனுப்புதுந் தொல்லறஞ் செழிக்க!

என்னருள் வடிவாகிக் கதாதரன் எனும் பேர்
தன்னு மாதவன் உதிக்குனன், தோமறு கங்கை
கன்னலம் பயிர் வளர்த்திடுங் காமரு புக்கூர்.'
என்னலுந் தொழு தேத்தினர் வாழ்த்தின ருகந்தார்.

## ௪. பரம ஹம்ஸரின் பெற்றோர்கள்

### அறுசீர் விருத்தம்

பூமகள் மகிழ மார்தர் புலன்களை செறியி லுய்த்துச்
சேமமாய் அறத்தைக் காத்துச் செம்பொனும் ஓடென்றெண்ணிக்
காமத்தைக் கடந்த நயன் கதையினைப் பாடி யென்றன்
நாமனத் திருக்குந் தாயே நலம் பெற வருளுவாயே!

பூமகள் தனங்கள் போன்ற பொருப்பினின் றலகை யூட்ட
வோமுட னிழிந்தே யெங்கு முயிரெனப் பரவு கங்கை
வாமரோண் ணியற்கைக்காட்சி விளங்கிடு வளங்கள் மல்குங்
காமரு புக்கூ ரென்னுங் கண்கனி நிலைய மாமே.

## சுத்திராமும் சந்திரமணியும்

அத்தல வாசி யானோர் அருந்ததி வசிட்டர் போன்றோர்
சுத்திரா முடனே யிந்து மாமணி யென்னுந் தூயர்
பத்தியும் பரிவுஞ் செய்ய பண்பொடும் பாரி லோங்கி
முத்தியின் வழியில் நாளு முயன்றனர் உயர்ந்த வாழ்வால்.

வரநதி போன்ற சீலர் வறுமையிற் செம்மையாய்ப் பூ
சுரர்தமக் குரிய வெல்லாஞ் சோர்வற வியற்றி சொந்தத்
தருமத்தை யாவிபோலச் சமதம மோடு தாங்கி
வருந்தினும் விருந்தை யூட்டி யைங்கடன் வளர்த்தா ரன்னோர்.

கலி விருத்தம்

தூவழி யாற்றியே தங்கமாய்ச் சிறு
தேவைக ளீட்டவர் சேர்க்க வெண்ணிடார்;
பூவினின் னல மெணிப் பூசை பண்ணுவார்;
தேவெனப் பூதொழச் செம்மை யானவர்.

## ரு. தலயாத்திரையும் சந்திரமணி கருத்தரித்தலும்

அறுசீர் விருத்தம்

முன்னரே தேரி தன்னில் மொய்களிப் பெய்து நாளோர்
பொன்னனத் துகளி லானைப் பொய்க்கரி புகல வேண்ட
வென்னுயி ரானையாக வித் தொழிற் கிணங்கே னென்னப்
பன்னரு துன்ப மீந்தான் பழுதிலர் பாக்கம் நீத்தார்.

தீயவ னுறையும் பாடி சீரியற் குரியதாமோ?
நோயென வாழு மந்த நோவின னிடரிலாதே
தூய மெய் யொளியு நல்ல தொண்டரு மல்கு மிந்தத்
தேயத்தின் றலங்கள் சுற்றித் தரிசனஞ் செய்து சென்றார்.

மாலடி மனது வாவை மாதவன் புகழிற் கையைச்
சாலமாப் பூசை தன்னிற் சரிதையிற் காதை வைத்தார்.
சாலொடு தலங்கள் சுற்றிக் கண்ணொடு கடவுட் கண்ட
சீலரை எண்ணுவோரின் சிந்தனை தூயதாமே.

தலையினிற் றெழுத நாளிற் கனவினி லரியுந் தோன்றித்
தனயட னன்னை காணச் 'சகத்திருள் நீக்கு மைந்தன்
தனயை யெனுஞ் சாந்தமோடுந் தபனன்போ லொளியி னோடும்
இனைபதுவ னுனக்கே' என்ன வியம்பினள் கொழுநன் போங்க.

போந்தன னெளியோ டந்தப் புனிதையி னகட்டில் மைந்தன்;
சேர்ந்தனர் காமர் புக்கூர்; செம்மையாற் குறைவி லாதே
பேர்ந்திடுஞ் சேயையெண்ணி யிறைவனை யெண்ணி யெண்ணி
வாழ்ந்தனர்; வனப்பை மாசிக் களித்தனள் வையமாதே.

## சு. திருவவதாரம்

### கலி நிலைத் துறை

சிந்தை தூயது, செய்கையுந் தூயது, வாக்கும்
அந்தரங்கமுந் தூயது வாகிய தரிவை,
எந்தமைக் கருத் தரித்திட விளைந்தவ ளெனவே,
வந்து கும்பியி லருந்தவ மிருந்திடு மைந்தன்,

புதிய நல்லொளி புதுநயம் பரப்பிட வியற்கை,
பதமுஞ் சாந்தமும் நிறைந்திடப் பாரெலா மகிழச்
சிதைத்து வெவ்விரு ளோடிடத் தினகர னெனவே
உதித்தனன் னின நகையொடு முயர்வளிப் பளித்தே!

### கலி விருத்தம்

திருசெய் முகமுந் திகழும் முறுவல்,
செருசெய் திருள் வென் றிடுமத் தெளிவும்,
முருகுத் தளிர்செய் முளையின் னெழிலில்
உருகா ருளரோ வுவமை யுளதோ.

மறையே முகமும் மறைகள் விழிகள்,
மறையங் கரமும், மறை செவ் வடிகள்,
மறையே மலர்வாய் அருள்சேர் மனமும்
மறையே யிலகும், வடிவெங் கிறையே!

பெரியோர் பெரியோன் பிறந்தா னெனவும்,
அரிதிவ் வுலகில் லழகி தெனவும்,
அரியோ வரனே வமரன் னிவனென்
றுரைசெய் தனருள் விழியா லுணர்வார்!

## ௭. கடவுட் சேய்

### அறுசீர் விருத்தம்

அலர்தரு முகமு மாழ்ந்த நகையொளி யழகு மிந்த
வுலகெலாம் அடிவணங்கு முயர்பெருங் குறிகளோடும்
இலகிடு மைந்தனைக் கதாதரன் என வழைத்தார்
நிலமறி யிராமக்ருஷ்ண னெனும் பெயர் நிலவப் பின்னே.

தெளிவுரு வான சந்த்ர மணிதரு தெய்வப் பாலே
யொளியுடன் பிறந்த மைந்தன் உண்டனன்; தாதை செய்யும்
அளவறு வழிபாட்டுடு மன்பினிற் றவழ்ந்த மைந்தன்
உளமுறு தூய்மை யென்ற னுரையினுக் கடங்குமாமோ.

### கலி விருத்தம்

உரியன செய்தா ருவந்துறு காலம்
அரியன வாமழ காடல்க ளோடும்
பெரியவ னுருவன் பெட்புட னென்றே
தெரிய நடந்தனன் தேன்மொழி பேசி.

ஊன்றலும் நிற்றலு மூர்தலுங் கைகள்
ஆன்றவின் னிற்பொலி யம்பிலி காட்டித்
தோன்றலின் பச்சிளஞ் சொற்கள் நுகர்ந்தே
யீன்றவ ளின்றவ மீதெனச் சொல்வார்.

### அறுசீர் விருத்தம்

எவரையும் வெல்லு மாற்றல், இரக்கமு மருளு மோங்கிப்
புவிபிருள் போக்க வெண்ணிப் புரையறு மாட லோடு
மின்மொழி மறையோ யாயோ வெனவுல கேமமாக
அவினயப் பாட லாட லமுதுகுத் தோங்கி னனே.

## அ திருவிளையாட்டுகள்

அஞ்சுறு மனத்தனாகி யதட்டினுக் கிணங்கான்; தூய
செஞ்சொலாற் கதைகடம்மைத் தேவரும் பருகச் சொல்வான்;
மஞ்சுறு மியற்கை கண்டே, மனப்பர வசமே யாவான்
நெஞ்சினை மறப்பான் அன்பால், நின்மலன் பெயரைக் கேட்கின்.

துறவிகள் வருகுஞ் சாலை துன்னுவான்; தினமுஞ் சார்ந்தர்
உறவுகள் கொள்வான்; அன்னோர் உடைகளை யணிந்தே தாய்முன்
சிறப்பினைப் பாரிங் கென்பான் செவ்விய துறவைப் போற்றிப்
பிறகுறு மனிதன் சேயிற் பிறங்குவ தறியலாமே.

நாடக வரங்குஞ் செல்வான், நாவக மூட்டித் தானே
யாடுவான் றோழரோடும்; அரிகதை யுருகிக் கேட்பான்;
நாடியே யுரைப்பான் பாடி நடித்திடு வானே யிந்தப்
பீடுறு மைந்தன் பள்ளி பிறங்கிய தெங்கு மம்மா.

தந்தையு மாகு செல்லத் தமயனின் காப்பில் வாழுஞ்
சிந்தனை தூய சேய்க்குச் சீருப நயனஞ் செய்தார்;
அந்தமில் மறைகள் முன்னே யாய்ந்ததன் சாரமாக
வந்தவன் றனக்குங் கல்வி வகுத்திட வகைசெய் தாரே.

புலன்களா லெங்கும் ஞானம் புதியன வேற்று நாளும்
இலங்கிடு நெஞ்சினனை யிறைவனென் றறிகி லாதார்,
மலங்களும் மாயை யெண்ணம் மல்கிடு மிந்நாட் கல்விப்
புலன்கெடு சாலை கொண்டு புகுத்தினர் புனிதன் றன்னை.

## ௯ படிப்பறல்.

பார்த்தன னிடம்ப வேடம்; பாலருங் குருவுஞ் செய்யுங்
கூத்துகள் கண்டான்; இங்கே கொடுத்திடும் போலிக் கல்வி
நாத்திக மெனவு மித்த நாகரீகங்க ளெல்லாம்
ஆத்தும ஞானங் கொல்லு மம்ம வென் றஞ்சி னானே!

பீடுறு சேயு மிந்தப் பிணியுறு கல்வி தன்னில்,
மூடுறு நிற்குந் தீய முந்நசை மாயை யென்றான்.
தோடுறு நூலும் மீளாத் தொத்துடை வினையைக் காட்டும்;
வீடதைக் காட்டா தென்றே, விலகின னேடி னனே.

கலை தெரி புலவர் வாதங் கண்டுளம் பதைப்பா னிந்த
வுலை யெழு மொழிக ளாலே யுண்மையை விளங்கா ரென்பான்.
உலகியற் கல்வி யெல்லாம் உதரத்தை வளர்க்க வல்லால்
இலகுமுள் ளொளியைக் காண வியன்றிடா வீணென்பானே.

உண்டிமுன் னலம்ப லெல்லாம் ஒடுங்கிடுந் துய்க்கும் போதே
வண்டதன் பூசலெல்லாம் மதுவுணும் போது முண்டோ
கண்டவர் களிப்பிற் பேசான்; புனல் நிறை கலயம் போல்வான்;
விண்டவ ரில்லை யிந்த வீண் வழக் கான ரென்பான்.

ஈட்டுதற் கான கல்வி யில்லையே லில்லை வாழ் வென்
றூட்டமா முளத்தி னுற்றார் ஐயனை யறியா தின்றேன்
கேட்டினை யென் சொல்வோ மிக் கிரகமே செம்மை யற்றேன்
கோட்டத்தின் வழிபாட்டிற்கே யேற்றவன் கொள்வோமென்றார்.

———()———

## ௬.௦ தக்ஷிணேசுவர ஆலயம்.

சத்தமிட் டருகு கங்கை சகத்தினை யூட்டிச் செல்லச்
சித்திர வியற்கை சூழச் செழி பொழி லிலங்க ராணி
பத்தியாய்ச் சமைத்த கோட்டப் பணிகளை யாற்றி யங்குச்
சத்தியில் நினைப்பை யூன்றித் தக்கிணேச் சுவரம் நின்றான்.

நாண்மலர் மாலையோடு நன்மன மலருஞ் சேர்த்தே
நான்மறை கடந்த சோதி நாயகிக் கிடுவான்; அன்பாய்த்
தான்அமு தட்டுக் கையால் தாய்க்கவன் படைப்பா னெண்ணி
சோன்புடன் பூசை செய்தான் நூலெலாங் கடந்த சீலன்.

உருவினைத் தாயே யென்றங் குருகியே பணிவான்; நாளும்
இருள்பக லோர் கிலான்; நீ யிதனுளே யிருத்தியோ வென்
றருமையாய்க் கேட்பான்; அம்மா! அடியன்முன் வருவா யென்பான்;
ஒரு மொழி பேசென்பானை யொரு மனத் துதிகள் செய்தே.

உன்னையே நோக்கி யிந்த வுலகுடை யாடல் நீத்துதேன்.
உன்னிலே தவழ்ந்து வந்தே யுவகையோ டமுத மான
என்னுடை மழலைப் பாக்கள் இசைத்துனை யம்மை யென்றே
பன்னுவேன் பூசை யுன்றன் பாதமே துணையாய் நின்றேன்.

கண்களில் நீயே யுள்ளாய்; கருத்தினில் நீயே யுள்ளாய்;
பண்களில் நீயே யுள்ளாய்; பதுமத்தில் நீயே யுள்ளாய்;
எண்களில் நீயே யுள்ளாய்; எவற்றிலும் நீயே யுள்ளாய்;
பெண்களில் நீயே யுள்ளாய்; பெருகுமா னந்தச் சோதி!



## ௧௧. பக்தி

### எழுசீர் விருத்தம்

மக்களின் சேமமே மருடமா யுள்ளதுன்
மங்களம் பொங்கு முகமே!

மிக்கவென் நெஞ்சினை யுருக்கினை! உன்னருள்
வெள்ளமோ டொன்ற லானேன்!

மத்தகம் பிறையோ! மலர்க்கணுங் கருணையோ!
வாணுதல் லொளி யிலங்கும்

சக்தியே! தேவீ! மகிழ்ச்சியே கன்னமோ!
தானவாய் நகை மின்னலோ!

ஞானமும் யோகமுங் கலைகளுந் தந்திடும்
நாவினு லொன்று சொல்லாய்!

வான்முகில் ஒதிகண் டென்மனத் தானந்த
மஞ்சை நடனம் புரிகுதே!

கானமார் கந்தாத் தென்னையாள் ஓர் சொலின்
கண்டிவ துங் கடினமோ?

மீனெலாம் பூண்களோ விசும்பெலாம் ஆடையோ
வீங்கு மானந்த வடிவே!

வேறு

காதளவு கண்கள் சென் றென் முறைகள் கேட்டுன்
கருத்திளகி யென்னுளத் துன்

சோதியருள் வெள்ளமே பாயவரு ளன்னையே
தொண்டர் துணை யான சுடரே!

வேதமொடு கின்னரஞ் சூலமொடு கைமுகில்
வித்தைதரு சக்தி முதலே!

பாத மலர் நெஞ்சமலர் சூடு மன்பர் தமிற்
பத்தன் யான் ஒருவ னன்றோ?

வேறு

செங்கதி ருதித்ததுவோ! மின்றிரள் திருக்குலமோ!
செய்தவ முதித்த வொளியோ!

கங்கைநதி யென்னசிரி வளமோ! களிப்பினெழு
கரையற்ற கருணை முகமே!

மங்கள மெனும் புன லுதித்திடு பரப்பதுவோ!
மங்குல்முடி பெற்ற மதியோ!

பொங்கிடு மெழிற்கடல் கடைந்தெழு மமிழ்தயோ
புன்னகை சொலிக்கு முகமே!

வேறு

எங்குமருள் சிந்திடுநின் கண்கருணைத் தண்கடலோ
என் நினைவு மறியு மறிவோ!

பொங்கியெழு மின்பவெளப் போதநிறை கானநதி
போர்த்திடு நின் வாக்கு வாழி!

சிர்தைசெயு மன்பருறை மங்கள வளம் பெருகு
சித்திதரு வீடு மனமோ!

சர்ததமு முன்றுதிசெய் யென்கலிக ளிற்றுவிழச்
சற்று நினை சக்தி முதலே!

———()———

## கஉ. உருவே தியானம்

கருத்தில் நீ! தலத்தில் நீ!
கடத்தில் நீ! மகத்தில் நீ!

புலத்தில் நீ! படைப்பில் நீ!
பொருப்பில் நீ! பொருட்களில்

உரத்தில் நீ! செயத்தில் நீ!
ஒருத்தி நீ! நினைத்திடும்,

அனைத்து நீ! என் ஆவி நீ! என்
அம்மை நீ! என் அன்பு நீ!

எழு சீர் விருத்தம்

பொறிகா ளுமக்கு மிகவின்ப மின்று
புவியன்னை தன்னை வணங்கீர்!

அறிவான தீப முடனேற்றி யிந்த
அருட்சோதி தன்னிற் கலவீர்

நிறைவுற்று பந்தப் பிணிவிட்டு முய்ய
நிகரற்ற நேர மிதுவே!

முறைசெய்து போற்றிக் குறையற் றிருக்க
முதலுற்ற சோதி யிதுவே!

வேறு

உருவே யுருவறு சக்தியே! முக்தியே!
ஓங்கார மான நிறைவே!

திருவே! ஞானமாச் சோதியே! ஆதியே!
திக்கெலாம் நிற்கு மொன்றே!

அருளே! ஆத்மவா னந்தமே! பந்த மோட்
டம் மருந்தே! ஆதிதே!

குருவே! யிவ்வுட லாவியுன் சேவையிற்
கொண்டருள் செய்தி டாயே!

யானும் என்னதை முற்றுனக் கீந்தபின்
ஐயமும் பிணியு முண்டோ?

ஈனப் புகழொடு நன்மை தீமை யான
இருவினைற் புண்டோ சொலாய்!

தேனே! தெள்ளிய அமுதமே! தேவியே!
செய்யவுன் மன மாருக!

யானே உன்றனி யிச்சையை யாளுவோன்
ஆருயிரை யாளு முதலே!

எண்சீர் விருத்தம்.

எத்திக்கு முனைக்காணு மெழிலே வேண்டும்!
எற்றவுன் தொண்டு செயு மாற்றல் வேண்டும்!

எற்றைக்கும் அழியாத செல்வம் வேண்டும்!
எது வரினுங் கவலாத மனமே வேண்டும்!

சத்தர்குழு வேண்டு மிலேல் தனிமை வேண்டும்!
சஞ்சலமே வந்து புகா நெஞ்சம் வேண்டும்!

சுற்றமெலாம் விலகியுனைப் பற்ற வேண்டும்!
சுதந்திரமே! உன் சுடரைக் காண வேண்டும்!

## கரு. பரவசம்.

பூசிக்க எண்ணுகையில் பூவில் இருப்பவளே!
வாசிக்க நான்மனதில் வாரா வகை யெனவோ!
யோசிக்க எவ்வுருவு முள்ளா யுலகினிலே
யாசித்தேன் உன் நிசத்தை அன்பாய் அருளுவையே!

ஆயிர முன் காதே, அடிமைமுறை கேட்டிலதோ!
ஆயிர முன் கண்கள், அடிமை துயர் பார்த்திலவோ!
ஆயிர முன் கைகள், அடிமை துணை யாகிலவோ!
ஆயிர முன் நாவே யறைந்திலதோ வோர் பொருளை!

அறுசீர் விருத்தம்.

என்றிறும் பலவா றுக இதயமே யுருகி யாறுய்ச்
சென்றிடக் கண்ணீர் "அம்மா சேய்க்கிரங் காத தேனோ!
ஒன்று நீ யாகி யின்னே யொளித்துனை யிருப்ப தேனோ!
இன்று நீ தோன்றுயாகில் என் செய்வேன் என்செய்வேனே!,"

பூவினைத் தன் மேல் தூவிப் பொங்கிடும் அமுதந்தன்னை
ஆவலோ டேட்டித் தானும் அக்கணம் உண்ணுவானே;
பாவினால் துதிப்பான், ஆடிப் பரவச மாவான்; கண்டோர்
ஆவனோர் பித்த னிவன் அம்ம வென் றறைந்து நக்கார்.

பெண் புவிப் பொருளாந் தீய பித்தினில் உழலும் பூமி
தன்னைத் தான் அறிந்த தூயர் தம்மையே பித்த ரென்னும்;
முன் நிலை முமம்மதோடு நானகன் முதலோர் சான்றும்;
பண்ணுறு கங்கை நீத்துச் சேற்றினி லமுழ்த்தும் பாரே.

———()———

## கசு. சுற்றத்தார்.

கண்டனர் உறவோர் பித்துங் கடிமணத் தினாக்க நீங்கும்
என்றுடன் புனித நல்லாள் இலகிடு கற்பும் பொற்பும்
கொண்டதோர் சாரதாப் பேர் கோமளக் கொம்பன்னாளை
மன்றலே முடித்தார் தன்னை மறந்தவன் றனக்கு மற்றோர்.

தன்னுறை வாலயத்தில் தனியிடத் திருந்து, தேவி
தன்னையே நினைப்பான்; ஆடை தரிப்பதை எண்ணான்; ஊணுந்
துன்னுழி யுண்டா னந்தந் துள்ளிட ஆடல் செய்தே
யன்னையே பெண்ணிற் கண்ட, அத்தனு மிருந்த வாறே!

முன்னிலும் பித்த ஆடல் முதிர்ந்தது; தூயன் முற்றுந்
தன்னையே மறந்தான்; செல்வர் தந்திடு முயர்ந்த பட்டால்
மண்ணையே துடைப்பான்; வேறு மாதரைத் தாயே யென்று,
பண்ணுடன் தொழுவான்; பாசப் பற்றிலார்க் கெதுவு மொன்றே!

கூட்டமாய் வருவார்; இந்தக் கூத்துகள் காணீ ரென்றுள்
நாட்டமே யில்லா மாந்தர் நவிலுவர் மாயை யாலே;
சேட்டையாம் பித்தனென்றே சிரிக்குனர் போகச் சிற்சில்,
தேட்டமா மறிவினுளர், தேவனென் றறிந்திட் டாரே!

உறவினர் வருவார் நாளும் ஓதுவார் மனத்தின் பாசம்.
பிறர் பலர் வருவார் தூயன் பித்தெனக் களித்து நிற்பார்.
அறிவரோ வுண்மை யிந்த ஆசையின் வலையுட் பட்டார்
பிறங்கிடுந் தொலையில் தீபம் பெற்றடி சுற்றி நீழல்.

———()———

## கரு. கான் புகல்.

புன்மையாந் தளையுட் பட்டுப் புண்ணிய மறியா மக்கள்
தன் மனச் சாந்தம் போக்கத் தனிப் பெருங் காடு புக்கு,
தன்னுடன் தனே வாழ்ந்து, தாயினை நினைத்தான்; பூவில்
இன்புறுந் தேனி சற்றும் ஈக்களோ டுறைவ தாமோ?

பசிதுயி லற்றான்; முற்றும் பந்தங்கள் விடுத்தான்; செல்லும்
திசி பக லறியான்; ஆழ்ந்த நினைப்பினைத் தேவி கொள்ளத்
திசைதிசை யவளை எண்ணித் திரிகுவன்; வானக்கூரை
சசியொளி விளக்கந் தாங்குந் தாரணி வீட்டி லம்மா.

அன்னையே! அம்மா! இந்த யாக்கையு முயிரும் வேண்டேன்!
உன்னதே யுன்பால் ஈந்தேன்! உன்னை நீ காட்டுவாயே!
தன்னலங் கனியே, பாகே, கருத்தினை யள்ளு மன்பே!
என்னுயிர்க் குயிரே! வார கில்லையேற் பிழையே னிங்கே!

நிசி பகல் தேடு கின்றேன்; நீயெங்கு மிருந்தும், நெஞ்சம்
பசி மிகு செய்க்குன் அன்பைப் பருகிடக் கொடுத்திடாயோ!
சிசு வினுக் கிரங்காத் தாயோ! வெருகினுஞ் சிறியை நீயோ?
இசை பெறும் உலக அன்னை! என் துயர் அறிகிலாயோ!

ஆ இதென் வியப்பே! என்றன் அன்னை! இக் கண்மூ டாடல்
ஓய் விலா தோர் நாட்போல; உன்னை யான் தேட விட்டாய்!
ஆவியே யருளே யின்று மகன்றது; வா! வா!" என்னத்
தாவியே யாண்டு கொண்டாள் தனையனை யுலகவன்னை.

———()———

## சசு. தேவி வழிகாட்டல்

என்னரு ளாலே பூவின் இருள் துடைத் திடவே யுற்றோய்!
என்னையே எங்குங் கண்டோய்! இணையறு தூய!உன்போல்
அன்பினை யாரே செய்தார்; ஆசையை யாரே வென்றார்!
நின்னையான் நீங்கேன் என்னை நீங்கவே முடிகிலாதோய்!

பிறந்தவ ரெல்லாம் ஒவ்வோர் பீடுற வினையை யாள்வர்;
இறந்தவர் வினையே மூய்த்தோர்; இதனை நீ யறிதி சேயே;
அறந் தவிர்த் தடிமையான அன்னைநாட் டினையே காக்க,
சிறந்த தொண் டேற்றி வந்தாய் செப்புகேன் அதனைக் கேளாய்.

பண்டுசீர் இழந்து வேதப் பாதையை மறந்தே, ஓயாச்
சண்டையுங் காமமாதி சகத்தினைப் பிணித்து நிற்கும்;
கண்டு நீ தெளிந்த வுண்மைக் காட்சியுந் தன்னை யென்றுந்
தொண்டொடு சமமும் ஓதித் துயரினை நீக்குவாயே!

இன்னிய கதைக ளாலும், எளிதறி பொருள்க ளாலும்,
பன்னிய பணியைச் செய்வாய் புகலிய வழியிலே செல்ல;
உன்னுளே களனாய் யானே யுதவுவன் அளர்ந்தே யிந்த
மன்னுசீ ருலகுக் கீவாய் மாதவ" என்று போந்தாள்.

அருள்மொழி யோடு கண்ட அம்மையைத் துதித்தான் "என்றும்
குருவொடு மன்னை யானாய்! தொண்டனை யாண்ட சோதி!
கருமத்தைச் செய்வேன், என்றன் கருணையங் கடலே!" என்று
பெருமகிழ் வோடு பெற்ற பேற்றினை யெண்ணி னானே!



## ௧௭. ஓர் அணங்கு

கண் திறந்த களிப்புறு காட்சி யான்
பின்பு மற்புதம் பீடுறு பற்பல
கண்டனன் சில திங்கள் கழிந்ததும்
பெண்ணொ ருத்தி பிறங்கினள் முன்னரோ!

அன்னையே யென் றடிபணி யாளனுக்
கன்னை வாணி யவளுரை செய்குவாள்
உன்னை யொத்த வுளத்தர் அருமையே
தன்னை யன்பில் மறந்த தவத்தனே

வித்தை யோகம் விளக்கிடு பல்மதச்
சத்தையுந் தரணிக் கதை சாற்று வி
தத்தை யுந் தரு மத்தையுந் தந்துனுஞ்
சித்து மீகுவன், என்றனள். தேறினன்.

சந்து மோர்பகல் காந்திடக் காயமே,
யுக்கு மொர்த்தனை லுத்தமி தீர்த்தனள்.
மிக்கு வெம்பசி நீக்கினள் மேதகு
மக்கு றிப்புகள் மிக்கவர்க் கென்றனள்.

பொங்கு பல்கலை யம்பொருள் போதித்தே,
தங்கு சித்திகள் சாதக மாக்கியிந்
நங்கை யாண்டுகள் நம்பனைப் போற்றியே,
யெங்கு சென்றன ளென்பதை யோர்கிலம்.



## கஅ. தோதாபுரி

முற்ற றிந்து முனிந்தவன் முன்னினான்
பற்ற றுத்துப் பழுத்த திகம்பரன்
சுற்றி யெங்குஞ் சுடர், மழை தாங்கினன்
உற்றான் தோதா புரி யெனு முத்தமன்.

எட்டு மெட்டிய நற்றவ னின்கழல்
தொட்டு மேற்றனன் றேமறு நம்பனே
தட்டி லாத சமாதியைச் சாற்றினன்
விட்டிலா திருந் தாற்றினன் விண்ணவன்.

வேறு

ஆண்டுகள் நாற்பது யான் தெளிந்ததை
மூன்று நாட்களில் முழுதும் முடித்தவா
சான்றவ சகத்தினில் ராம க்ருஷ்ணாறாய்!
ஆன்றவர் மதிப்பரென் றார்த்த கன்றனன்.

அங்கவன் போயபின் ஆழ்ந்த யோகத்தில்
தங்கினன் மாதங்க ளாறு துங்கவன்
நீங்கறு மானந்த நெஞ்சத் தேனையுண்
டோங்கின னொளியினி லுடல் மறந்தவன்.

வேறு

தவ மிருந்து தனிச்சுட ராகினான்
சிவ மிருந்திடு சிந்தையி னாற்பெரும்
புவி யிருந்திடு புன்மையுந் தன்னையப்
பவ மிறந்திடப் பற்பணி செய்தனன்.



## கள. அருள் தொண்டு

பொன்னை மண்ணுடன் கங்கையிற் போடுவான்
தன்னையும் பிறர் தம்மையு மொன்றெனப்
புன் புலையர்க்குந் தொண்டு புரிகுவன்
பொன்னைக் காணினும் போக்குடல் கூசுவான்

புக்கு பஞ்சம ரின்மனை புங்கவன்
சிக்கி ஞற்புவி நீவுவன் செம்மையாய்த்
தொக் கிருக்கு மழுக்குகள் தோண்டுவான்
உட் கழும்பு துடைத்திடு முத்தமன்.

சாதியும் நிறமும் பிறர் தானென்ற
பேத மெல்லாம் பிரிந்தவர் ஞானிகள்
சோதி நிற்கையில் தீபந் துலங்குமோ
கோதை வீசுமிக் கொள்வர் விசிறியோ!

வாட்ட மின்றி வருப்பவ ருக்கு மெய்
கோட்ட மின்றிக் கொடுத்தன னள்ளியே
கேட்ட கேட்டவர் கேள்விக் குரைத்தனன்.
நாட்டமும் பல நாடின விவ்வணம்.

கண்ட வின்பங் கருதுவர் சீரியர்
மண்ட லத்தற மோங்கிட மாந்தர்க்கே
விண்டு ரைப்பர் விருப்புடன் மாரி போல்
தொண்டு செய்திடு தொத்தறு முத்தரே.



## உ0. மதானுபவம்

பெண்ணுருப் பூண்டே யெற்குப் பிறவியற் றன்டே யாயின்
கண்ணனை மாதே யாகிக் கடவுளுக் கிதய மீந்தே
பண்ணுறுங் குடிலிற் பாங்காய்ப் பாட்டுடன் பஞ்ச நூற்றே
யின்னிய வாழ்க்கை யோடி மிருப்பதென் னாசை யென்பான்.

பேதைபோல் நடிப்பான் மாயன் பெட்பினுக் குரிய னாகி
ராதைபோல் நாதா வென்பான்; ததாகதன் வீர னேசோ
டாதிர குலும் போல்வான் அவரவர் மதமு மோதிப்
பேதமொன் றில்லை யெல்லாம் பிரந்தவோ ரிடத்தி லென்பான்.

வேறு

சலநிதியி லாறுகளுஞ் சல சிலத்துத்
தாவுவபோல, நகரஞ் சாரப்
பலவழிக ளிருப்பதுபோல், தலையனைநள்
பலவற்றும் பந்சொன் றேபோல்
உலகினிலே தாய்மையெனு மோராழத்தின்
மேல் கிடந்தே யுண்மையாக
இலகுபல மதங்களுக்கு மொரு கடவு
ளிறைவனென விளம்பு வானே.

காதல ரேனு கற்றங் கனித்துமே நடக்கு மில்லை
மாதரான் போன்றே தாமும் மற்றவர் மதத்தைப் போற்றி,
தீயினைக் கண்டார் போலும், உம்பல்காண் குருடர் போலும்,
யாதினை விடுத்தே யீசன் மகிழ்பணி யாற்று மென்பான்.

சச்சிதா னேற்றமான தருவினி லெண்ணி லாத
அச்சுற ருள்ளார் பூவின் அறத்தினை வளர்க்க வேண்டி
யிச்சைகொண் டவத ரிப்பர் இடர்களைத் தவிர்ப்ப ரின்றோர்
சொற்களைய வென்றேன் பானர் சுடர்மாய் டமுத்த ரோதி!



## உக. சாரதா தேவி

மாதரி லன்னை கண்டே வணங்கிடும் புனிதன் மேட்ட
போதக மடக்கன "நாதன் பூசனைக் குரிய தேவன்
ஆசலாற் றெனர்ந்தி யாகி யவன்டனை செய்வே னென்றே
கோதறு மனத்தி ளேருமேச் குதுகினள் உரியோன் காணா.

நின்றதோர் மனைவி தன்னை 'நின்மலத் தேவி' என்றே
சென்றடி தொழுதே யேத்திச் செய்தனன் பூசை; "உன்னில்
என்றனை யாளு மன்னை யிலகுரு வல்லால் வேறு
கண்டிலன்" என்றான் காமக் கடலினைக் கடந்த தூயன்.

திகைத்தனள் அணங்கு சற்றே; திருவடிக் கமலம் போற்றி
"தகைமனத் தோடு வந்தேன், தண்ணடிச் சேவை யாலென்
பகைவினை போக்கிப் பொங்கும் பரிவகக் கருணை யாலிம்
மிசையுடற் பிறப்பை நீந்திப் பிழைக்கயான் விழைந்த வாறே.

வேதனை யரனும் மாலும் விரிஞ்சியும் வியக்கக் காம
வாதனை யடைத்த தூயா! மண்ணொடு பொன்னுங் காண
பேதமொன் றறிகி லாத பெரியவ வுன்றன் சேவை
ஈதலால் வேண்டே னத்த இமயவ ருலகும்" என்றாள்.

"வித்தைசேர் வேளையப் போலும், வாரிசத் தகட்டில் நீர்போல்,
சுத்தமாக் கத்தி யாயுன் தொண்டுக ளாற்றி யுய்ய
புத்தரா விருந்தேன்" என்ன, உதவினன்; ஐயடத்தில்
அத்தனின் பணிப்பே றெய்தி, ஔவையா யமர்ந்தாள் மாதோ!



## உஉ. யாத்திரை

மதுரநா தென்னுந் தொண்டன் "மாத்தி பெறுக வென்று
பதமலர் தொழுது வேண்டப் பழுதிலான் "வெய்ய திட்டாம்
இதை இங்கும் என்பேர் சொல்லி யெங்கிலும் வழங்கேல்" என்றான்
பதைபதைத் தழுதான் காசு படுக்கையிற் படிறு மம்மா!

தன்னவ னோடு மிக்க அருமறை வணங்கு நாட்டின்
புண்ணியத் தலங்கள் சுற்றிப் புனிதரும் பெரியோர் போற்ற
கண்ணனின் விருந்தை யாங்கு 'ராதவோ' என்றே தூயன்,
கண்ணனை யழைப்பான் ஓர்ந்து களிப்பினை யளப்பர் யாரே!

வினிதையுங் காசி யான்ற மிதிலையும் மதுரை யின்பக்
கனிதரு காட்சி யாருந் தலங்களைக் கண்டான்; ஆங்கு
முனிவரர் பலரு மேற்றார், முத்தாயி னுவகை கொண்டார்,
புனிதனைப் புனிதர் காணின் புளகத்திற் கெல்லை யுண்டோ!

திரும்பழி அகர மொன்றில் திருத்தகு பாத நாட்டின்
அரும் பெரும் புதல்வர் தீய மிடியினல் அழுங்கக் கண்டே
வருந்தினன்; அழுதான்;பொங்கு வளம் புகழ் நாட்டி லிந்தப்
பெருந்துயர் பிறந்த தேனே பிழையிதன் மேலு முண்டோ?

அன்னையே யருளாய் பாவத் தாதியாம் வறுமை நோயை
இன்னுமிந் தீர்த்தி டாயேல் இவ்விடம் நீங்கேன்" என்னக்
கன்னலும் மதுராநாதன் கைம்முகில் பெய்தே தீர்த்தான்
முன்னவன் அருளால் இந்நோய் முடிந்திட மாந்தர் வாழ்க!



## ௨௩. உபதேசம்

நானந வான தூயன் தருமொழிச் சுதையை மாந்தி
ஞானமுங் களிப்பு மல்கி நல்வழி யொழுகி ஞாலம்
வானவக் குருவின் காலில் வணங்கிய தனிகள், பூத்த
தேனுறு மலரைத் தாமே தேடியே யீண்டு மன்றே!

செய்களுந் தெளியும் மாந்திச் சிந்தனைக் கமுத மாகும்;
தூய்மையுந் துறவு மாக்கும், துயர்தரும் பற்றை நீக்கும்;
ஐய்ந்து பல் மதங்க ளேற்கும்; அருங்கதைப் பொருள்க ளோங்கு
"தாய்தர அளப்பேன்" என்றே தனியனும் பொழிந்த வேதம்.

நீரோடும் பனிமே அன்னான், நீளுயிர்க் குயிராய் நிற்போன்,
காரோடும் அக்கம் போல கவில்பல மதங்கட் காவன்,
பேரிருள் மாயை நீக்கப் பிறங்குவன்; உன்னுள் அன்புஞ்
சீரிய வுறுதி யாயின் சிந்தையி லறிய நிற்பான்.

உள்ளி போல் உலகம்; ஆடி யுறுதுகள் போலு மாயை;
கிள்ளை போல் நெஞ்சம்; ஈசன் கருப்பகம் போல்வன்; கேடில்
உள்ளற வீந்தி டப்ப முற்றிடா தாசை நீத்துக்
கன்னலை மாது போலக் கருதிடின் கதியுண் டாமே.




வேதாந்த கேசரியாகிய சுவாமி விவேகானந்தர்

மாயையில் உழலு வோர்க்கு மருந்தெனக் கதிய ளித்தோன்
சேயெனத் திரிந்தான் கல்விக் கடல்களுஞ் சேவை செய்தார்;
தூயவாய் மலரின் தாதைத் தொண்டரும் உலகோர் நெஞ்சம்
பாயவும் பழுக்கச் செய்தார் பாரெலாம் நலமே பொங்க.



## உச. சுவாமி விவேகானந்தர்

கங்கையணி திருநாட்டின் பெருந்தவமென் றுதித்ததொரு
கடவுள் வீரன்,
கங்கையணி நாயகனின் அருளனமந்து நாட்டிருளை
நலிக்க நாடித்
தங்கமணிக் குரு வருளின் சுடரினில் தன் அறிவேற்றித்
தூய சோதிச்
சிங்கமென வெழுந்து நமைச் சிங்கமெனக் காட்டியவன்
திறமை சொல்வாம்!

பாரின்பம் பெருக்குகலை பல பயின்றுங் கவலை நிறை
பாரி வின்றேன்
ஓரின்ப மறியாது வுயரின்பம் பெற்றிடவே
யுற்றார் தம்மை
சேரின்பக் கடவுள்தனை சீர்காட்டு மெனவினவும்
நிமலன் றன்னைப்
பேரின்பத் தால் வளர்த்த பெரியோனின் மதம் பிறங்கப்
பிறந்தோன் வாழி!

பணிபாலும் நினைப்பாலுந் தவத்தாலுங் குருவினிடம்
பயின்ற ஞானம்
அணிபாக நிலவுலகிற் கருளாளுந் துணைவர்தமை
யருகு சேர்த்தே
துணிவாகப் பயிற்றுவித்துத் துறவாகச் சுற்றுவழி
துன்னிச் சென்னை
தனியாக, அறிவோர்கள் அனுப்பிடவே சர்வமதச்
சங்கஞ் சென்றான்.

பாரதரின் அறம்புகழும் பருமவுட லெடுத்ததெனப்
பல் மதத்தின்
சீரதிருச் திருச்சபையில் செப்பொரு இடர்க்கடலைச்
செயித்தே நின்று,
வீரமுடன் பொழிந்தசொரு வேதாந்தப் பெருமழையால்
விளைந்து ஞானம்
பாரமுதம் உண்டிடயப் பசியாறப் பணி செய்த
பண்பன் வாழி!
புதுவுலகும் பண்டுலகும் புத்துயிர்பெற் றிலகிட நம்
புகழுஞ் சீரும்
முதுகடலைக் கடந்தொலிக்க, மூவுலகுந் துதியேத்த
முயற்சி யானோன்
சுதந்திரத்தைத் தொனித்திந்தப் பாரதரின் சோர்வகற்றிச்
சுடராய்ப் பூவின்
இதயமதில் மன்னுறு விவேகானந் தன் பெருமை
என்றும் வாழி!



## உரு. பரமஹம்ஸரின் மஹா சமாதி

வேதமே யுருவென் பாரும் விண்டுவே யறத்தைக் காக்கப்
போதமே கொணர்ந்தா னென்று புவியெலாம் வணங்கி யேந்தச்
சோதியாய்த் திரந்தே மக்கள் துயரிருள் கடிந்தோ னுக்கு
வாதனை யான தொண்டை மாலையும் வந்த தம்மா!

மருத்துவ ரனைவர் தேற மங்கிடு துயர்த் தடும்
திருத்திலன் கடமை தன்னை நிறுத்திலும் வாயைய, கேட்டோர்
கருத்துற மொழிவான் அத்தக் கனிப்பினுல் துயர மென்னுறேன்
விருத்தெதிர் வரினும் மேலோர் வினையினை விடுப்ப துண்டோ?

தொண்டர்கள் மருங்குகுழுத் தொல்லுல கோர்கள் வேதம்
வண்டெனப் பருகச் சொன்ன வாய்மலர் குவிய மோனி
யண்டிய தெய்வ அறி ஆண்டவ னேடு சேரக்
கண்டனர் கருமமுற்றுங் கழன்றறு காயந் தன்னை.

முகத்தினை யிருளில் மூடி மொய்துயர் மனத டைக்கப்
புகலறு மௌன மெய்திப் பூவுலகிருக்கச் சீடர்
பகலென மனதை யேத்திப் பட்டென மறைந்த மின்னுங்
சுகமறு கூட்டைக் கண்டார் துயரினைத் தாங்க வொண்ணார்.

"சத்தியி னருளிற் பூத்து, தீர்மமே தவஞ்செய் தான்ற
இத்தலத் துயிரு னெல்லாம் ஈசனைக் காட்ட வந்த
சுத்தனே! குருவே என்று துடிதுடித் துகுத்துக் கண்ணீர்
தத்துவங் கடந்தோன் றன்னைச் சமாதியில் விடுத்தா ரம்மா!



## பரமஹம்ஸர் வாழ்க!

விழிமின் றெய்வமா வொளியினை யுமதுளே விண்டே
எழுமின்! நும்வினை யறிகுமின் இடைவிடா ததன்பால்
உழைமின்! வெற்றியோ டுயர்களிப் பெய்துமின்! எனவே
விழும வின்னிய, அருள்மொழி விளம்பியோன் வாழீ!

வினையெனும் உழவுசெய்து விதைத்து நல்லறிவைத் தூய
குணமெனும் நீரு பாய்ச்சிக் கோதெனுங் களையை வாங்கி
எனதெனும் விலங்கு வாரா தவனெனும் வேலி யிட்டே
மனதினைப் பழுக்க வைத்த மங்களம் வாழி வாழீ!

அருளொளி பழுத்து வந்த அமுதவாய் உண்மை எங்கள்
இருளெனுந் துயரை நீக்கி, இன்பமே யாக்கி, நெஞ்சில்
தெருளெனுந் தேனை யூட்டித் தேசெனும் வலிவை யியப்
பொருளெமக் கீந்த நாதன் பூவடி வாழி வாழீ!

மருட்டிடு மாயைதன்னை மனக்களம் வெல்ல நல்ல
அருட்டுணை யான தூய ஐயனின் சரிதை வாழீ!
திருத்தகு நெஞ்சினின்று தேவியே புகலும் ராம
கிருட்டின பரம ஹம்ஸன் கிளர் மொழி வாழி வாழீ!

வாழ்க என்றும் அருட்பணி மானவர்
வீழ்க மாயை மிடியிரு ளின்குலம்
தாழ்க தன்னயம்; சத்தியம் ஓங்குக!
சூழ்க ஆனந்தம் தொல்லுல கெங்குமே!



ஓம்

## பரமஹம்ஸோபதேசம்

௧ சத்தியின்தண்ணடித் தாமரை போற்றியே
அத்தனின் வாக்கை அறைகுவன் பாவாய்
௨. மாறறு அன்பும் மகிழ்வும் உறுதியும்
ஊறறு வாழ்வும் உதவி யருளாய்!
௩. பூவின் மகிழ்வும், புலரியின் சாந்தமும்,
சேயின் தெளிவுடன் செம்மனம் உய்ப்பாய்.



## கடவுள்

௧. ஒன்றே பலபெயர் உற்றினும் ஒன்றது.
ஒன்றே கடவுள் உளன்பல மதத்தும்.
௨. ஓதி நிறம்பல மாறினும் ஒன்றதே
ஆதி உருப்பெய ராலும் அவனே.
௩. மண்ணதொன் றாயினும் மட்கலம் பற்பல
பொன்னதொன் றாயினும் பொற்கலம் பற்பல
ஒருவன் பலவுற வெய்வதை யொப்ப
அருவ னுருவனும் அவனோர் ஈசன்.

௪. சச்சிதா னந்தத் தருவினின் றெண்ணிலா
அச்சுதர் ஏசு அவதரிப் பாரே.

ரு. மின்விளக் கெண்ணில; மின்பொறி யொன்றுபோல்
பன்மதச் சோதிப் பரம்பொரு ளொன்றே.

௬. நீரிற் குமிழி நிவந்து மறையுமே;
ஓரிறை னின்றே உயிர்வந் தடங்கும்.

௭. அலையுங் கடலில் அடங்கும் எழுந்தே;
பலபிறப் பெய்திப் பரமனுட் சீவன்.

௮. பாடி யணுகவே பல்வழி போலவே
நாடும் பலமதம் நாயக னொன்றை.

௯. பன்னிறம் மேல் உறை; பஞ்சணை யொன்றுபோல்
பன்மதத் துள்ளும் பகவன் ஒருவனே.

௧௰. பகல்மறை மீன்களைப் பார்க்க இயலோம்
அகமிருள் மூட அறியோம் இறையை.

௧௧. எண்ணெயில் தீபமே ஈசனில் மக்களும்:
அண்ணலின் அன்பால் அனைத்தும் விளங்கும்.

௧௨. கற்பகம் போலக் கருதிய மாற்றமே
அற்புத ஈசன் அளிப்பன் அனைத்தும்.

௧௩. பெரிதாய் எழுதுவர் பின்சிறி தாக;
பெரிதே சுடுவர் சிறியது பின்பே.

௧௪. உருவன் பனிபோல்; அருவனே நீர்போல்
உருவாய்த் தொழுதும் உறுவான் இறைவன்.

௧௫. தீயிலே விட்டில் தித்திப்பில் எறும்புபோல்
நாயகனல் லன்பில் தொண்டர் கரைவர்.

௧௬. தொலைரவி நுட்பமாய்த் தோன்றுவ போலத்
தொலைமனம் ஈசன் சிறிதெனச் சொல்லும்.

௧௭. பாசக் குளமும் படுதாப் பெண்ணொடு
தூசிசேர் ஆடித் துகளும் போலவே
பாச வினையே பரம னொளியினை
மாசுற மறைக்கும் மனத்தி லறிவாய்.

௧௮. தன்னய மற்றுத் தருமப் பணிசெய்.
உன்னுவை; ஈசனே உன்னுளே யுள்ளான்.

௧௯. ஒன்றறு சுன்னம் ஒருமதிப் பாகுமோ?
இன்றேல் இறைவனே என்பயன் வாழ்வே?



## கடவுளுணர்ச்சி

௧. அறிந்தவ ரீசன் உறவின ராவர்
அறியா தவரோ அவன்படைப் பாவர்.

௨. அரசனும் ஆளை யனுப்பியே ஆளும்
அரனருள் தூதனால் ஆளுவன் பூவை.

௩. தன்னுள் சிறிது தரினுந் தனவான்
இன்புட னேற்பபோல் ஈசனும் அன்பை.

௪. வேளை விடுத்தும் விருந்து வருவபோல்
காலம் விடுத்தும் கருணை வருமே.

௫. பனியோடு பாகும் பரமவா னந்தமும்
அனுபவித் தோர்க்கே அறிந்திட வொண்ணும்.

௬. பாடகர், நாரதர் பாடுவர்; பின்னரே
நாடகந் தன்னிலே நண்ணுவன் 'கண்ணன்.
பீடுறு மன்பினால் பேசியே யீசனை
வீடுறு மென்றே விளம்பினர் மேலோர்.

எ. அலையில் அலைந்தும் அமைதியில் நின்றும்
நிலவும் மதிபோல் நினைவுள் ளொளியே.

அ. நீரோடு வற்றியே நீருள் நிறை குடம்
நேரவே கேவலம் நித்திய வின்பமாம்.



## குரு

க உணவெத் தகப்ப னுதவான்? மனத்தின்
பிணியைத் தவிர்ப்போன் பெருந்தகை யப்பன்.

உ. வத்தையிற் சேர்ந்த வரைமுழு காது போல்
அத்தனைப் பற்றின் அழுந்தான் உலகில்.

ங. ஆவி ரதமொடு மம்பியும் போல் குரு
தாவியே தன்னொடுந் தாட்டுவன் மாந்தரை.

ச. பக்குவ மூலப் பதமெனும் மென்மையில்
தக்க பகவன் வருவனே தானாய்.

ரு. அரசன தாளும் அடைகுவன் சீர்மை
வரத னருளால் மதமுரைப் போனும்.

சு. நடுக்கடற் புட்கொரு நாவாய் கதியாம்.
புடவியு ளோர்க்குப் புகல் குரு பாதம்.

எ. குறிமன வேடன் குறிமீன் வலைஞன்
உறு கயல் நோக்கும் ஒருமனக் கொக்கும்
கௌவல் எறியக் கருடனும் புட்களின்
கௌவை யொழிந்ததன் காரணத் தாலும்
சேர்த்தே யிழக்குந் தேனீ யனையன
தீர்த்த ரெனவே தெளிந்தான் முனியே.

௮. கோட்டையுட் சென்றார் குதித்தே யிருவரும்;
கட்ட மகிழ்வை யியம்பினன் மற்றொரு
அன்பனே போன்றோர் அகக்களிப் பெய்தியே
இன்புறச் சொல்லுவர் எனையோ ருக்கும்.

௯. மற்றையும் விட்டு மறைந்ததோர் ஆட்டையே
முற்றுடன் தேடுவன் மூதன் பிடையன்.

௰. தேன்மலர்த் தேடியே தேனீ வருவபோல்
ஞானியைத் தேடியே நண்ணுவர் நல்லோர்.



## முக்தி வழி

௧. தூண்பிடித் தாடுவோன் சுற்றுவன் வீழான்;
ஆண்டவற் பற்றி அனைத்தையு மாற்று.

௨. ஓரிடம் ஆழ உறுதியாய் வெட்டுமின்
ஓரிறை நம்பி யுலகில் தொழுமின்.

௩. எண்ணெய்க் கலயமே ஏந்திய நாரதன்
கண்ணனை எண்ணக் கணமும் முடிந்திலன்;
குடியா னவனோ குடும்பமும் தாங்கித்
திடமா யிருமுறை செப்பினன் ஈசனை.

௪. அக்கமு டாடலில் ஔவைதொட் டோன் எனத்
துக்க மறுக்கத் தொடுவாய் கடவுளை.

௫. தொடுகலால் எஃகுமே தோமறு பொன்னும்.
கடவுளால் நெஞ்சம் கருணை மயமாம்.

௬. பலப்பிசின் எண்ணெயாற் பற்றிடா தே கை;
உலகும் தேவை யுணர்ந்தவன் றன்னை.

௭. நீர்க்குட நங்கை சிரக் கடவுளைப்
பாரிலெவ் வேளையும் பத்தியோ டெண்ணு.

௮. கள்ளனை மாது கருதுவ போலவே
உள்ளூற வீந்தே ஒருவனை எண்ணு.

௯. மஞ்சளைப் பூசியே மாகடல் நீந்திடு.
விஞ்ஞியா னத்தினுல் மேதினி நீந்து.

௧0 தன்றன் கருமமே தான்செயல் இன்பமாம்
பன்மை நினைப்பும் பயமும், பழுதாம்.

௧௧ நெருப்பொடுஞ் செம்மை நிலவியே நீங்கா
இரும்பென ஈசனே டீசனே யாவாய்.

௧௨ காந்தம் வடதிசை காட்டியே காப்பபோல்
வேந்தனைக் காட்டி விரிமனங் காக்கும்.



## நம்பிக்கை.

௧. நம்பி விறகரி நன்மையே பெற்றதை
நம்பிக் குருவை நலமெய் திடுவீர்.

௨. நம்பி ரா மாவென நங்கை நடந்தனள்
நம்புதல் விட்டாள்; நடுநதி யாழ்ந்தாள்.

௩. ஒருமுறை ராமவென் றோதிடின் பாபம்
அருகிடும்; மும்முறை யார்த்திடச் சொன்றேப்
நீயோ ரிழிகுல ளுகவே நில்லெனத்
தூய குகனைத் துலங்கினன் சீடன்.

௪. வழுக்கி விழினுமே வாரி முழுக்கு
வழுத்தினெம் மாற்றமும் மல்கிடும் அன்பு.

௫. நம்பியே தாவினன் நாயகன் தூதனே,
நம்பியோ சேதுவை நாட்டிக் கடந்தான்.

௬. கடலுளே சாந்தம் கலத்தைக் கவிழ்க்கும்
மனதுளே ஞானம் மருளைச் சிதைக்கும்.

௭. அன்புடன் மூன்றுநாள் ஆர்த்திடின் அன்னையே
இன்ப வுருவோ டிலகுவள் முன்னே.



## நூலறிவும் வாதும்

௧. எண்ணினேன், உண்டோன் எவனே பயனுளான்?
பண்ணேல் தருக்கம் பலநூற் புலவீர்.

௨. பிணத்தையே நோக்கும் பிராந்துயர் சென்றும்.
பணத்தையே நோக்குவன் பண்டிதன் கற்றும்.

௩. வண்ணான் வெளுத்திடும் வத்திரம் தன்னதோ
எண்ணிலா நூல்கள் எதுவரை யும்மதே?

௪. மறையுறும் எச்சில் மருவலால் வாய்ய
இறைவனே தூயன் இயம்பிட வொண்ணான்.

௫. பரிசிற் கரசன் படியினும் என்றான்
இருதரம்; பண்டிதன் சுதுணர்ந் தானச்
சுகமீ கனியின் சுவைபுசித் தேகான்
புகுத்தனன் உண்மை புலப்படின் பேச்சேன்?

௬. உறினே உரையாம் ஓ வெனும் சந்தை;
பெறினே தெளிவர் அதுவரை பேசுவர்.

௭. உண்டிமுன் கூச்சலாம்; உண்ணுழி மௌனமே.
வண்டு மதுவையே மௌனமாய் மாந்தும்.

௮. அன்னவன் மொழிகளைத் தோழிபாற் சொல்லும்
மணமகள் போலவே மாதவர் இன்பம்.

௯. சடுவ்வரை தோசை சரீரென் பதுபோல்
சடருறு மட்டும் தொடுப்பரே வாதம்.

௧௦. பஞ்சாங் கமதில் பதின்மாக் கால்மழை;
கொஞ்சநீ ரேனும் கொடுமோ பிழியின்

௧௧. அருமறை காயத் திரியில் அடங்கும்
பிரணவம் தன்னிலே பின்ன தடங்கும்.



## பொருள்களின் அநித்தியம்

௧. அருந்துவோம் சித்திரை அம்மா ரசப்பூ
பெரும்பலி தப்பிய பின்பு சேயே!

௨. எனதென மைந்தர் இகல்செயும் போதும்
நனதென வல்லமை சாற்ற மருத்துவன்
ஆதியாய் நிற்போன் அறிந்தே இவருடைப்
பேதமை கண்டே பெரு நகை செய்வான்.

௩. மரபா யுழுவோன் மழையிலேல் அஞ்சான்
வருந்தும் புதுநில வாணிபன் அஞ்சி.



## உலகம்

௧. பாம்புள வீட்டிலே பத்திர மாயிரு
வீம்புபே ராசையின் வீடா முலகிலும்.

௨. விலைச்சிமச் சத்தையே வாசனை யென்பள்
அலரோர்கு திமண மாகு மவட்கே;
உலக மணமே உலகாய தர்க்கு
நிலவுர் துறவு செடுவிட மாமே.

௩. இறைநீர் அனைத்தும் எலிவளை புக்கின்
நிறைகரும் பென்னும்? நினைவும் நகையுள்.

௪. காயல் மனிதனின் கண்முனர் உண்டிபோல்
மாய மனமுன் மயக்குவ நிற்கும்.

௫. தயிரிடும் பானையும் பாலிடத் தக்கதோ?
உயர் பொருள் காண உலகோ னுதவுமோ?

௬. புகையிற் புகுந்தாற் புகைபடி யும்மே
மகனொடு ஆணும் மனவிகற் பாவர்.

௭. பச்சைக் களிமண் பலவுரு; சுட்டது
இச்சைபோ லாகா திருள் மன மென்ன.

௮. ராமா வெனுங்கிளி சாரவும் பூனையே
கிமீ யென்றிடும் கீர்த்தி பேண் மாந்தர்போல்.

௯. கோவை யிரக்கக் குறுகினன் அல்லஹோ!
தாவினும் என்றான் தரித்திர மன்னன்.

௰. யானையை நாய்கள் அரற்றிக் குரைப்ப போல்
ஞானியை யுலகோர் நகையுரை செய்வர்.



## சமரசம்

௧. காதலை சுற்றம் கணித்து நடந்திடும்
மாதரான் போல் தன் மறுமதம் போற்று.

௨. ஓடிடு நீரிலே ஒட்டறு பாசம்
ஓடா விடினது ஒட்டும்; இறைவனை
நாடு மனதுள் நாடும் சமரசம்
நாடா மனதுளே நாடிடும் வேற்றுமை.

௩. வாவியுள் தேரையே வாவி பெரிதெனும்
ஆழியின் தேரை அதுபோற் சொலுமோ?

௪. யானை யறிந்தநால் அந்தகர் போலவே
தான்கண் டதென்றே தருக்கமே பேசேல்

௫. காட்டிடேல் கண்டா கருணன் மதவெறி.
போற்றுன் மதமே புறமதம் என்னேல்.



## பிறவி ஞானிகள்

௧. பறவையில் ஓமெனப் பாரழுந் தாதே
பிறந்ததும் முத்தும் பெரியரு முன்னார்.

௨. உருசியே யுண்டவன் உண்ணுன் கசப்பை
அரசன் குமரி யணைவனோ ஏழையை.

௩. கன்னலும் மண்ணும் கணத்திற் பிரித்திடும்
நுண்ணெறும் பேய்வரே யுண்மை நுகர்ந்தோர்

௪. நீருளே கல்லெனச் சீரியர் மாறிடார்
சேர்ந்து கரைவர் சிறுவர் களி போல்.

௫. ஆதவ னென்றுகண் ணாடிநீர் போல்வன
சோதிமின் டையுமே சுத்தர் மனம்போல்.



## உலகும் ஞானிகளும்

௧. ஈ போல் உலகரே தேனிபோல் ஞானிகள்
ஈரமோ டற்றதீக் குச்சிலை யெய்வார்.

௨. நற்றவர் அன்பர் நசையோர் உலகினில்
கற்றுணி யுப்புரு கஞ்சமுட் போல்வர்.

௩. மகவினுங் இற்பணி மாது குறைப்பள்
அகவொளி வீய அதனும் புலிநசை.

௪. சொந்தமாம் பொந்தறும் பாம்பெனச் சோதியர்
சொந்தவீ டற்றுச் சுயநல மெண்ணார்.

௫. நீரில் படகு, படகிலே நீரிலே
பாரில் ஞானியே ஞானியுட் பாரிலே.

௬. நீரிலே தாமரை சேற்றிலே மீன் போல்
பாரிலே ஞானிவி காரமெய் தானே.



## கருமமும் ஞானிகளும்

௧. வேண்டார் விசிறியும் வீசுழி தென்றலே
வேண்டார் சடங்கு விளங்கொளி கண்டோர்.

௨. செவ்வி னுழிழியன நீத்தோர் ; கருமமு
மல்கவா னந்தம் முறையும், அருளாய்.

௩. செடிக்கும் வேலி; தெறிந்து மனத்தில்
இடம்பட ஆடுமா டெண்டுமே தீங்கிலே.
திடமுடன் நம்பித் தெளியின் உலகின்
விடங்கினர் மாழையும் வெய்யது செய்யுமோ?

௪. வாலறு தேரை வசிக்குமே நீர்விலம்
வாவிருள் நீங்கின் வசிக்கலாம் ஈரர.

௫. பொன்னையும் செம்புபோல் தேய்ப்பரோ பூவினில்
உண்மையோர்ந் தோர்க்கும் உபவிர தம்மோ?

௬. நரிமெனக் கேட்டதும் அம்புகும் போது
கருமமாம் பற்றுந் தழலுமே நன்றால்.



## பற்று

௧. சொரியச் சுகம்; பின் துயருறும் பற்றால்
தரும்நசை யின்றுயர் தாரணிப் பற்றே;

௨. துள்ளிளங் கன்றொடு தும்புறு கன்றும்
உள்ளத் துறவொடு பற்றிற் குவமை.

௩. செவிலி தலைவனின் சேயை வளர்ப்பள்
புவியோர் கடவுட் புதல்வுரை யன்றே?

௪. புள்ளுறுங் கூடயி ரற்றவிப் பொய்யுடல்
எள்ள நினைவிற் கலங்கேல் மனமே.

௫. எழுசா டிப்பொன் இருந்தும் அதிலொரு
பாழ்சா டிநிறைப் பணியிற் புகுந்து
துய ரெய் தினையால் துறந்திடு பொன்னே;
பய்க்கும் நசையறு பண்புடை யின்பம்.

௬. வெண்ணெய் மிதந்திடும் வெண்பால் கலந்திடும்
மண் நசை பற்றிடும் மாற்றும் துறவே.

௭. விழித்ததோர் வீட்டில் விரையான் திருடன்
விழிந்த மனத்தில் விழைவுசா ராது.

௮. தூண்டிடு கோலும் துருத்தியும் போலவே
சான்றவர் நட்பு; சால நலஞ்செயும்.

௯. கழாயர் உறவோர் களிப்பரோ கூத்தில்
நிழலாம் ஒளிக்கீழ் நில்வுமே செய்மையில்
நீர்த்தனை யுள்ளோர் தெரிந்திடா தேத்தியே
சேர்ந்துப் பணிவரே செய்மையுள் ளாரே.

௧0. புலியிட மீசனே புன்மையர் பாலும்
நலம்படத் தேர்ந்துமே நட்புசெய் வீரே.

௪௪. யானையும் தானுமே ஐயனென் றேர்ந்தவன்
வீணே விழுந்தான் வெறுத்தவன் பாகனை.

௪௫. பழுத்து முழுதாய்ப் பகவனுக் காகும்.
அறுத்தது வாகா தருபோல் மனமே.



## அஹங்காரம்

௧. உள்ளியின் பாண்டம் உயர்தென் வடுப்போல்
நல்லோர் நெஞ்சிலும் நாடும்அஹக்குறி.

௨. உரிக்கவே தோல் காண் உள்ளி யெனவே
விரித்துமே நோக்கின் வெறுமை யுலகே.

௩. காய்ச்சி யடிக்கவே காரிரும் பெஃகமாம்
காய்ந்து வருந்தவே காயமுந் தூயதாம்.

௪. கனிசேர் மரமே கவினுறத் தாழும்
கனிவுள ஞானக் கருத்தே பணியும்.

௫. ஹம் மெனும் மாடு; தும்மெனுந் தோலதாய்
தம்மெனும் மாயையே நீ யெனுஞ் சாந்தம்.

௬. எரிந்த யிறும் இலகும் உருவால்
அறிந்த மனதும் அகக்குறி யெய்தும்.

௭. பொன்னற் குடத்தில் புனலிருக் காதுபோல்
கன்ன மனத்திற் கடவுளி னன்பே.

௮. மின்மினி தானெனும் மீன்கண் டடங்கிடும்;
தன்னவ னுற்றதும் தாரகை மங்கும்
தினகர னுற்றதும் திங்களும் மங்கும்;
மனதொளி யுற்றதும் மாயை மறையும்.

௯. கடிவிடின் சீற்றமும் காட்டிடேல், கண்டோர்
இடும்பையீ வாரே இதையறி பாம்பே.

௧0. நீன் தவஞ் செய்தவன், நீரில் நடக்கும்
காலணாக் கல்வியோ கற்றனை மூடா!



## பெண்கள் தாய்

௧. பூனையைக் கிள்ளினன் புண்ணுறத் தேவியே
காணுவ தன்னையே யென்றனன் கந்தவேள்
பெண்களுள் உள்ளவன் பெண்களென் அன்னையர்
கண்களுள் உள்ளவன் காண்பதுந் தாயே.

௨. பெரியதோர் பெண்ணை நீ பெற்றதா யென்னு
சிறியளைத் தங்கை யெனவே தெரிவாய்.

௩. உலர்ந்த களியினுற் பானை யுறாது
சலமெனும் சக்தி சேரவே சாலாம்.

௪. மண்தோய் சேயையும் மாதா கழுவுவள்
அன்னையே யெங்கள் அகத்தி னழுக்கை.



## துறவு

௧. வெடித்துக் கறுகா விழும் பொறி போல்
விடுத்து வெளிவரும் ஞானி விழையான்.

௨. பழம்விழி னின்பமே காய்புளிப் பாமே
முழுதறி யாமல் முனியேல் வருணம்.

௩. தாய்க் குரல் கேட்டுத் தவிர்த்திடும் ஆட்டமச்
சேயென நீப்பரே தேவுகாண் ஞானியர்.

௪. காய்முதி ரப்பூ கழலுமே; ஞானத்
தூய்மை முதிரின் துறக்குமே பந்தம்.

௫. திருப்பித்தின் தாகீ தியாகி யெனுமே
கிருட்டினன் சொன்னதோர் கீதையின் சாரம்.

௬. இளனியும் கொப்பரை யெய்வரே யாக்கைக்
குண நசை யோடஃ தறுத்தோர் உலகில்



## இளமைப் பழக்கம்

௧. இளம்வேய் வளைத்தே யிருக்கும் சிவிகை
இளங்கிளி பேசியே யின்ப மளிக்கும்.

௨. முதுவேய் முறியும் முதுகிளி பேசா
திதுபோ லறிவு மிளமையி லோங்கும்.

௩. பச்சை யுலர்ந்திடின் பாக்குளே வேறுபோல்
இச்சையே வற்றிடின் இவ்வுட லான்மா.



## ஆத்ம ஞானம்

௧. புத்தியி லைக்கியம் பொங்குதல் ஞானமாம்
புத்தியில் பேதம் புரிவதஞ் ஞானம்.

௨. பாம்பினிற் சட்டைவே றாகும்; பருவுடல்
ஆம்வே றறிகுவை ஆன்மாவி னின்றே.

௩. கசமுனை ஆடி நிசமுகங் காட்டும்
சசியுடன் வன்னியாம் தூயதோர் வாழ்வும்.

௪. தேசிகன் சீடன் தெளிந்தவர்க் கில்லையாம்
ஆசையற் றேதமை யாளுவர் தூயர்.

௫. நீசியிலே கள்வன் நிதிதொடின் தேடான்
பசுபதி காணின் பரிந்தலை யாது.

௬. உன்னை நீ தேறு; உலகினி லோங்கியே
பின்னெலா மாகும்; பிறப்பும் நலமாம்.

௭. ஆன்மனுங் கோயிலில் ஐயனைக் காண்பவன்
வான்புவிக் கோயிலும் மல்கிடக் காண்பான்.

௮. அத்து விதத்தின் அறிவை யடைந்திடின்
எத்தையுஞ் செய்யலாம் எதுதீ தாங்கே?

௯. கலியிலே ஞானம் கடின மடைதல்
அலைக்கும் பசிக்குல களா மனைத்தும்.

௧௦. மண்ணவர் ஞானம் மனைக்குள் விளக்குபோல்
தொண்டரின் ஞானம் துலங்கு மதியென;
விண் மணி யொப்பது விண்டவன் மேதை.



## சில கதைகள்

௧. ஒருவருக் கொருவர் உயிர்தர மாட்டார்
இருநிதிச் சுற்றம் இலகொளிக் குண்டோ?

௨. வேசைபா லுற்றவன் ஈசனை யெண்ணினன்
ஈசனைக் கேட்டவன் வேசையை யெண்ணினன்.

௩. பைத்தியங் காட்டிடின் பைத்திய ராகுவை
வைத்து நினைப்பதே வாழ்வில் நிசமாம்.

ச. செல்வ மனைத்துமே சேவகன் தனதெனச்
செல்வன் விலக்கிடச் செம்பிலா னுனன்.

ரு. வேசைத் தொழிலிலும் ஈசனை யெண்ணியே
மாசில் சுவர்க்க மடைந்தனள்; மாதவன்,
பூசைத் தொழிலிலும் பூரியர் எண்ணமாய்
நீசனே யாகி நிரையம் புகுந்தான்.

சு. மாட்டையே கொன்றவன் மன்னனே கைக்கவன்
தோட்டம் எனதெனச் சொல்லினன் பார்ப்பான்.

எ. கனவிலேழ் மைந்தர் மரித்தார் கவலேன்
நினைவிலோர் மைந்தன் இறப்பின் நினைவனே?

அ. நாரணன் தூக்கங் கெடுக்கிறான் நாரதன்.
நாரிபாஞ் சாலியோ நம்பனின் றவினை;
கனகனின் சேய்பல கட்டமே யீந்தான்;
தனஞ்சய னீசனைச் சாரதி யாக்கி,
இனைய துன் பங்களு மீசனுக் கீந்தென்
மனத்தை வருத்தினர் மாண்பா மிவரே.

கூ. போகிறேன் போகிறேன் என்பவன் போயிடான்
வருவன் அக்கொடி யிச்சையே யற்றோன்.

கய. திருடனுங் குடிகனுஞ் செப்பினர் தப்பாய்
அருள் பெறுஞ் சாதே அறிந்தனன் சாதுவை.

கக. இராமனின் சித்தமே இட்டது காவல்
இராமனின் சித்தம் விடுதலை யீந்தது.

கஉ. சாம்பனைப் பூசினேன் சாதென வேண்டினர்.
நாம் பெருஞ் சாதுவே யாகிடல் நன்றே.

௧௪. இடியேல் நிலையை! யிறந்தவன் கை கால்
தடிமின் கடத்தலாம் என்றனள் தாரம்!

௧௫. அப்புற மென்றான் அதிபதி; அன்னவன்
வைப்பிடம் சொல்லவே வாஞ்சையைப் பெற்றான்.

௧௬. சாந்தர நெஞ்சிலா வாணிபன், தாரம்
தான்சொல வேண்டிய ஆடைகள் தந்தனன்
உம் மன மாகிட வுன்னுமின் உறுதியாய்
அன்பினைச் செய்மினோ அன்னையை நோக்கி.

௧௭. தாண்டினர் சீடரே தஞ்சம் குருவென
மாண்டனன் ஆசான் மதித்துமே தானென.

௧௮. வேடத் துறவியும் வேந்தனுபின், தவம்
நாடியோ னுக்கு நல மிகு மன்றோ?

௧௯. வைரமும் மண்ணும் மனதிலே யொன்றெனுந்
தைரிய மின்றித் தரணி யேன் நீத்தீர்?

௨௦ உலகும் கடவுளும் ஒன்றென ஆசான்,
கலங்குவ தற்றான் கருத்தி லிராமன்.

௨௧. அடித்தோ னிப்போ தாற்றுவ னென்றார்
அடித்தவ ரற்றோர் அறிஞர்க் கொருவர்.

ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
இராமகிருஷ்ணமிருதம்
முற்றிற்று.

சுத்தமே கடவுள்!

சுத்தமே சுகம்

சுத்தமே சர்வ மதசாரம்!

அன்புறுதி மெய்யறிவும் ஆண்மைச் சமரசமும்
இன்ப வெள்ள மோடிதயம் ஈசனோ டொன்றுகவே!

புன்மைபழுக் காறு வஞ்சம் போக்கிப் பொறுமையுடன்
உண்மை யுள வீரவுரை யோங்கிப் பரவுகவே!

ஊணருளும் நற்றொழிலும் உண்மை யருட்பணியும்
நாண் எளிமை நேர்மையுடன் நாட்டின் விளக்காவோம்!

கோயி லுல கந்தனிலே கோதற்ற தொண்டுடனே
வாய் மனமெய்த் தூய்மையுடன்வாழ்வோம்ஒருகுலமாய்

தூயனெமக்குத் தலைவன் தோன்றாத் துணைவனவன்
வாய்மன மெய் மன்னியெங்கள் வாழ்வை நடத்துகவே.

சத்தோஹம்!